உ

கணபதி துணை.

திருப்பாதிரிப்புலியூர்
சண்முகஞானியார்
அருளிச்செய்த

# முருகரந்தாதி.

இஃது - அஷ்டாவதானம்
பூவை
கலியாணசுந்தரமுதலியாரால்
பரிசோதிக்கப்பட்டு

சென்னை-சூளை
நிரஞ்சனிவிலாச அச்சுயந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

1892ஹு.

கணபதிதுணை.

# முருகரந்தாதி.

நேரிசை வெண்பா.

ஆறுமுக னாறுதலத் தையன்முரு
கையன்மேற்
பேறுதரு மந்தாதி பேசுதற்கு—
வீறுதரு
மைந்துகா னல்வாயானன்றமுக்கட்
டோன்றுகும்பக்
கந்தமத தந்திமுகன் காப்பு

கட்டளைக்கலித்துறை

வேலாசரணஞ் சரணமென்மேல்
வெகு ளாமலினி
மேலாயினுங்கடைக்கண்பார்பருப்பத
வேந்தன்மகள்

பாலாகுறுமுனி யார்க்குந்திருப்புகழ்
பண்ணவர்க்கு
மாலாலமுண்டவர்க்கும் முபதேசித்த
வாண்டவனே. (க)

ஆண்டவனுயுல கங்காணவேநின்று
மவ்வவர்கள்
வேண்டும்பொருடரு வாய்முருகா
நின்னைவேண்டறியார்
காண்டற்கொருதெய்வம் வேருள
தோகம லாசனனு
மாண்டறுமாலு மகவானுந்தேடிய
மந்திரமே (உ)

மந்திரமாறு மனக்குடியர்வைத்து
வாழ்பவர்கள்
சிந்தையிற்றுன்பிலையே முருகாசென
னங்கடொறும்

வந்தமராடிய மாவினையேமன
வாஃசிதனைச்
சந்ததஞ்சாரி நடாத்தவென்றாலுந்
தடையில்லையே: (௩)

தடையேதுமில்லைநின் றாடலைப்பூண்
டதபோதனர்க்கு
மடலேதருமுருகையா நினக்கடியே
னிழைத்த
விடயேதுமுன்ன மறிந்திலன்பாடற்
கிரங்குமின்பக்
கடலேயுனையடைந்தேனென்ன நீசெ
ய்தகாரணமே. (௪)

காரணமானது நெஞ்சமலாதிலை
காரியமோ
மாரணமான மடியையலாதிலை
வாசிதனை

யாரணஞ்சொன்ன தலத்தேசெலுத்த
வறிவருளும்
பூரணனேமுருகையா துணையிலைப்
பூமியிலே. (ரு)

பூமியும்வானமு மொன்றியபூரணப்
பெட்டகத்து
ளுமிருந்தோமிலை நெஞ்சேநமக்குள
நாள்வரைக்குங்
காமமின்றுற்படுகாடடைந்தோ
மொருகாலத்தினுஞ்
சேமமுருகனைச் சோலையென்சொல்
வன் றீவினைக்கே. (சா)

தீவினைதீர்க்குந் திருமுருகாநின்
றிருவுருப்போற்
பாவனைசெய்து பணிந்தறியேன்சிவ
பத்தருக்கோ.

ரேவலுஞ்செய்தறியே னிருந்தேணிறந்
தேனினிமே
லாவல்கொண்டாரெனை யாதரிப்பார்
வையத் தஞ்சமென்றே. (எ)

அஞ்சமென்றேயருளாய் முருகாவடி
யார்களுறு
சஞ்சலந்தீர்க்குந் தயாநிதியேயென்
றகமைக்கண்டு
கஞ்சனுமாலுமுக் கண்ணனுமாயிரங்
கண்ணனுமே
கெஞ்சிநின்றருன் மலரடிக்கே கிரு
பாகரனே. (அ)

காரனேமுதலிய ராவணனூர்குலங்
கட்டறுத்துத்
திரமேவியதிரு மான்மருகாநின்
றிருவடியென்

சிரமேற்பதித்துச் சிவோகத்திலே
நின்று சிந்தைசெய்ய
வரமேயருண்முரு காமயிலேறிய
மாணிக்கமே. (கூ)

மாணிக்கமொத்த மலர்த்தாடலை
மிசை வைத்துநித்தம்
பேணிப்பணிய வகைதெரிந்தா ரும்
பெயர்க்கரிய
வாணிப்பொன்னேயென தாவியும்
யாக்கையு மர்க்கமெலாங்
காணிக்கையாகத்தந் தேன்முருகா
வெனைக் கண்டுகொள்ளே. (க0)

கண்டுகொளத்தகு மோவெவராலுங்
கருதிநின்னை
விண்டுசொலத்தகு மோமுருகாவெ
ளி யானவர்க்கும்

பெண்டுபிள்ளைத்தரு மோமணிமந்தி
ரப்பேரெழுத்தைக்
கொண்டுவெலத்தகுமோ விதியால்வ
ந்த கோள்களையே. (கக)

கோளுங்குறுகப் பயப்படுங்கூற்றனு
ங் குப்பிடுவான்
வேளுமகிழ்ந்தருள் செய்வானமது
வினையனைத்து
மாளும்பனிரண்டு காலுளவர்சியை
வாங்கியுள்ளே
நாளுஞ்செலுத்த வகைதெரிந்தோமி
லை நன்னெஞ்சமே. (கஉ)

நன்னெஞ்சர்பாலினும் ஞானர்தம்பாலி
னு நானிலத்தி
லென்னெஞ்சர்பாலினு மென்பாலினு
மிருந் தேயளிக்கு

நின்னெஞ்சிரங்கு நினக்கிரங்காதவெ
ன் நெஞ்சகநின்
றன்னெஞ்சினிம் பெரிதோவறியேன்
றணிகாசலனே. (கந)

தணிகாசலாநின்றன் றுவளைத்தாட
லை மேலிருத்திப்
பணியரநெஞ்செனக் கேன்பட்டைத்
தாய்பசு பாசமுத
லணி யாதநின்னை யடையாதபேரில்
லை யாரொருவன்
பிணியாலுலகி லிறத்தனன்றேவெ
னைப் பெற்றவனே (கச)

பெற்றவர்தாமறி வா ரன்றிப்பிள்ளை
யின் பெற்றிதனை
மற்றவர்தாமறி யார்முருகாநல்ல
வாழ்வருளென்

றுற்றுனேநாடியுனாத்தது கோடியுண்
டுன்மனந்தான்
சற்றுமிரங்கலேயே சாமிகார்த்திகைச்
சண்முகனே. (கரு)

சண்முகனேநின் சரணம்பராவுஞ்
சரணரொலாம்
விண்முகம்பார்ப்பதற் கையமுண்
டோசொல்விம் மேதினிமேற்
பெண்முகநாடிய பேதைநெஞ்சா
லொரு பேறுமின்றி
மண்முகநோக்குதற் கையமென்னே
மயில்வாகனே. (கசா)

வாகனமான மனப்பரியேறிய
மாதவத்தோ
ராகமுந்தானழி யாதுகண்டாயரு
ளேவடிவாய்ச்

சேகரமாமுரு காநினையான்றெரி
    சிப்பமென்றான்
மோகமுஞ்சோகமுங் கோபமுங்கூ
    டியென் முன்னின்றவே. (கஎ)

முன்னின்றுகாட்சி கொடுப்பானம்
    மெண்ணமுன் னேமுடிப்பான்
பின்னென்றைநாடுவ தேனேமுருக
    ன் பெரும்புகழை
யுன்னென்றுணர்த்த நெஞ்சேயுணர்ந்
    தாயிலையுன்னுடன்யா
னென்னென்றுசொல்லுவ னென்பா
    வந்தன்னை யெடுத்தினியே. (கஅ)

எடுப்பானுமென்றலை மேலயன்றீட்டு
    மெழுத்தனைத்துங்
கெடுப்பானுமென்றுங் கெடாதவின்
    பக்கடல் கிட்டிநிற்க

விடுப்பானுமார்க்கும் வினைப்போக
முட்டிமெய்ஞ் ஞானச்செல்வங்
மகடுப்பானும்வேறிலையே முருகா
வென்குலதெய்வமே. (கக)

குலதெய்வமானநங் கோவேகுமா
குருபாநின்
மலரடிபூசித்து வாழ்த்திநின்றாரந்த
மாலயனு
மிலகுவலாரியு மெண்டிசையோரு
மிருசுடரும்
புலவருஞ்சித்தரும் பத்தரும்பற்பல
பூதருமே. (உ0)

பூதமென்றார்விந்து நாதமென்றாநு
போகசிவ
போதமென்றார்சுழி பேதமென்றார்
பொரு ளானதுநின்

பாதமென்றேயன்றியேதுமெண்ணு
தவர் பாரிலின்னு
மாதவஞ்செய்திட வேண்டுங்கொ
லோவள்ளி மன்னவனே. (உக)

மன்னுயிர்யாவையுந் தன்னுயிர்போ
ற்செய்யு மாதவம்போற்
பின்னொருமாதவ மில்லைகண்டாயினி
ப் பேதைநெஞ்சே
மின்னிடையார்முக நோக்குவையோ
கதிர் வேன்முருகன்
றன்னிருதாண்முக நோக்குவையோ
வென்னசங்கடமே. (உஉ)

சங்கடந்தீர்த்தென்னைத்தற்காக்குந்
தெய்வச் சரவணநின்
பங்கயத்தாள்பணி செய்யார்தம்பாவ
மும் பற்றறுமோ

சிங்கமுகங்கொண்டு பண்டோரசுர
னைச் செற்றுவெற்றிச்
சங்கந்தொனித்தசெவ் வாயான்வண
ங்கிய தற்பரனே. (உரு)

தற்பரசிற்பர மானதயாபர
சண்முகனின்
பொற்பதம்பூசித்து நேசித்திடாத
புலையனின்னு
மற்புதமுத்தி யடைவதுகண்டோவரு
ளாயமரர்
கற்பகநாடரசாளுந் துரைமகள்
காதலனே. (உ௪)

காதல்கொண்டேவருங் கானகவேடி
ச்சிக்கட்டழகன்
பாதமொன்றே துணை யென்றிருப்பா
ய்பலகாலுநெஞ்சே

வேதனைபோமிடி போம்வினைபோமு
ள்ள மெய்ம்மறந்து
சாதலும்போமெங்கு நீயாயிருந்து
சரிப்பையன்றே. (உரு)

சரிப்பார்மலையினுங் கானினுஞ்செ
ன்று சருகருந்தி
யெரிப்பார்தண்ணீ ருயிர்ப்பெல்லாம
டங்கி யிருந்துதவம்
மரிப்பார்நினதடி யார்முருகாவவர்
மாட்டடியே
னரிப்பாயிருக்க வெனக்கெழுத்தோ
நின்னை நம்பியுமே. (உசு)

நம்பிநின்றோர்க்குதவும் முருகாபுன்
மை நாயடியேன்
வம்பறுத்தாள மனமிலையோசொல்ல
வாயிலையோ

வும்பரைக்காத்த வொள்வேலிலேயோ
வென்மு ஞேடிவரச்
செம்பொற்பதமிலே யோவறியேனின்
றன் சிந்தனேயே. (உஎ)

சிந்தனைசெய்ய வருமுருகாநின்
திருவடியை
வந்தணைசெய் துவணங்கிநின்றல்வந்த
வல்வினையு
மந்தகனுல்விடு மோலேயுந்தூ தரு
மம்புவிமேற்
பந்தமுந்தொந்தமும் பாசமுநாசப்
படுமினியே. (உஅ)

இனியேதெனக்குனருள்வருமோவெ
ன்றின் றேங்கிநின்றேன்
முனியேலெனையுவந் தாட்கொணம்
முக்கண்ணி மோந்தெடுக்குந்

கனியேயினியகற் கண்டேயிங்கென்
 ஊக் கருதிவருஞ்
சனியேதவிர்த்தநின் றண்ணளியே
 யென்று சாற்றுவதே. (உகூ)

சாற்றியவாயின்மும் மூன்றையுஞ்சா
 த்தித் தணிக்கரிய
சீற்றமுதற்பதி ஞலையுந்தள்ளிச்
 சிவாசியென்றே
காற்றைவிளித்துக் கதிருடிருத்துங்
 கருத்தருளும்
வேற்றுமையின்றியிருப்பானென்
 னெஞ்சினும் வேலவனே. (ҧ0)

முருகாந்தாதி.

முற்றிற்று.

